ஸ்ரீ சிவாக்கிரயோகிகள்

அருளிச்செய்த

# சிவநெறிப்பிரகாசம்

ஸ்ரீ நந்திசிவாக்கிரயோகிகள்

இயற்றிய

உரையோடு


சென்னைச் சர்வகலாசாலை

தமிழாராய்ச்சித்துறைத் தலைவர்

சு. அனவரதவிநாயகம் பிள்ளை, M.A., L.T.


பதிப்பித்தது


சென்னைச் சர்வகலாசாலை

சென்னை

1936

[விலை ரூபா 1 அணா 8.

## FOREWORD

The *Śiva-neṟi-prakāśam* is a Śaiva-siddhānta treatise written by Śrī Śivāgra-Yogin about four hundred years ago. It expounds the principles of the Śaiva-siddhānta system in 215 verses, and, presumably written for the benefit of a lady-disciple of the author and at her request, presents them in a simple and clear manner. The text with the commentary written by a direct disciple of the author and his immediate successor to the headship of the Sūryanārkōvil Mutt forms an exhaustive exposition of the tenets of the Śaiva-siddhānta system of philosophy and is a complete compendium of its dogmatics. The merits of the work are dealt with in the Tamil introduction that follows.

The editor has great pleasure in acknowledging his indebtedness to Dr T. R. Chintāmaṇi, Senior Lecturer in Sanskrit, University of Madras, and Mr S. Vaiyāpuri Piḷḷai, Editor, Tamil Lexicon, for reading the proofs while the work was in the press and making valuable suggestions.

S. ANAVARATAVINAYAKAM PILLAI

# உள்ளுறை

# முன்னுரை

சைவ சமயமும் சைவசித்தாந்த மதமும் தமிழ்நாட்டில் நெடுங் காலமாகப் பயின்று வருகின்றன. இவ்விரண்டும் தமிழ்நாட்டிலே தோன்றித் தமிழர்களாலேயே ஆதியில் வளர்க்கப்பட்டன வென்பதற்கு நியாயம் பலவுண்டு. ஆயினும் சைவசமயம் காஷ்மீரம் நேபாளம் கூர்ஜரம் முதலிய வட நாடுகளிலும் அநுஷ்டானத்திலிருப்பதாலும், ஆங்குச் சிவாகமங்கள் பிரசாரத்தி லிருப்பதாகக் காணப்படுதலாலும் சைவ சமயம் தமிழ்நாட்டிற்கே யுரியதென்று கூறுதல் பொருந்தாது. அன்றியும் மஹேஞ்ஜோதாரோவிற் சிவலிங்கம்போன்ற சிலைகள் காணப்படுதலால் அங்குச் சிவ வழிபாடு வழக்கி லிருந்ததெனச் சொல்வாருமுண்டு. மற்று, பழைமையான சைவ சமய சாத்திரங்கள் ஸம்ஸ்க்ருத மொழியிலேயே எழுதப்பட்டிருக்கின்றன. ஸம்ஸ்க்ருத மொழி ஒரு சாதியார்க்கு உரிய மொழி என்பது ஆராய்ச்சியுடையார் உரைக்கும் கூற்றன்று. ஸம்ஸ்க்ருத மொழி பரதகண்டத்தில் சமயவுணர்ச்சி மிக்க அனைத்துச் சாதியாரும் தம் கொள்கையை யுலகிற்கு வெளியிடற்குத் தெரிந்துகொண்ட மொழி. சிவாகமங்களும் அவற்றை யநுசரித்துத் தோன்றிய உபாகமங்களும் பிரகரணக் கிரந்தங்களும் ஸம்ஸ்க்ருதத்திலேயே யுள்ளன. திருவுந்தியார் திருக்களிற்றுப் படியார் முதலிய சில நூல்களே தமிழ்மொழியில் முதலில் தோன்றின. அவையும் ஸம்ஸ்க்ருத நூல்களில் பெரும்பான்மைய தோன்றிய பின் தோன்றியவையே.

## சைவசந்தானம்

திவ்யாகமங்கள் இருபத்தெட்டனுள் ஒன்றாகிய காரணாகமம் ஆசாரியலக்ஷண முரைக்குங்கால் சைவர் ஐவகைப்படுவரென்று கூறிச் சதாசிவர் அநாதிசைவரென்றும், கௌசிகா காசிபபர் பாரத்துவாசர் கௌதமர் அகத்தியர் என்னும ஐவர் இருடிகள் சதாசிவ மூர்த்தியின் ஐம்முகங்களில் தீட்சை பெற்றவரென்றும், இவர்கள் வழிவந்த சிவப்பிராமணரே ஸ்தாபனாதி கிரியைகட்கு அருகரென்றும் உரைத்தது. இதுவே ஆதிசைவ சந்தானந் தோன்றிய முறைமை.

உபதேசகாண்டம் 86–வது அத்தியாயத்தில் கைலாசகிரியில் புஷ்பகிரி ஆமர்தனகிரி கோளகிரி பிக்ஷாகிரி யென்னும் நான்கு சிருங்கங்களில் ஆதியில் தேவியாதியர்க்கும் நந்திகேசுவராதியர்க்கும் அரிபிரமாதி

யர்க்கும் சனகாதி முனீந்திரர்க்கும் ஆகமங்கள் உபதேசிக்கப்பட்டன வென் றுரைக்கப்பட்டது. திரிலோசன சிவாசாரிய ரியற்றிய **சித்தாந்த சாராவலி** [கிரியாபாதம், 89] யில் 'சைவசந்தானமானது அனந்தேசுரர் முதலான அஷ்டவித்தியேச்சுரக்கிரமமாக வந்து துர்வாசமாமுனியினாலே இந்தப் பூலோகத்தில் உற்பவித்தது. அந்தத் துர்வாசமாமுனியிடத்தில் தீக்ஷாதியனுக்கிரகம் பெற்ற இருடிகட்குப் பாரதவர்ஷத்தில் போக மோக்ஷப்ரத மானதாற் சிறந்த முக்கியமான கதம்பவிருக்ஷமாகிய அலங் காரத்தோடு கூடிய ஆமர்த்தக மென்னும் பெயருள்ள ஒரு மடம் உண்டா யிருந்தது' என்று பொருள்படும் சுலோகத்திற்கு உரையெழுதுங்கால் வியாக்கியாதா அனந்த சிவாசாரியர் 'பூலோகத்தில் ஜம்புத்வீபத்தில் நடுவிலிருக்கும் மேருபர்வதத்திற்குத் தெற்கிருக்கும் இமயமலைக்குத் தென்புறம் பாரதவர்ஷமென்று பிரசித்தமாயிருக்கிறது. அதில் பரதகண் டத்தில் துர்வாசமாமுனியினாலே ஸ்தாபிக்கப்பட்டது ஆமர்த்தகமடம். அந்த மடத்தில் கௌசிகர் காசியபர் முதலானவர் தக்ஷிணாமூர்த்தி ஸ்வரூப ரான ஸ்ரீகண்டபரமேசுவரரை யுபாசித்து அவரிடத்திருந்து ஆகமஞானம் பெற்றுக்கொண்டிருந்தார்கள். இவர்களுடைய சிஷ்யர் சனற்குமாரர் சனகர் சனாதனர் சனந்தர் என்னும் நால்வரும். பின்பு ஆமர்த்தகமடத்தி லிருந்து அதற்குச் சரியானதாக ரணபத்திரம் கோளகி புஷ்பகிரி என்று மூன்று மடம் பிரிந்தது. ஆமர்த்தகத்தோடு கூட நாலு மடங்களுக்கும் சனற்குமாரர் முதலான நால்வரும அதிபதிகளாயிருந்தார்கள். ஆமர்த்தக மடத்திற் கதிபதி சனற்குமாரர், அங்கே கதம்ப விருக்ஷம், அவர் சந்ததி யார் அந்த மடாதிபதிகளாயிருந்தார்கள். புஷ்பகிரிமடத்திற் கதிபதி சனகர், அங்கே அர்ஜுன விருக்ஷம், அவர் சந்ததியார் அந்த மடாதிபதிகளா யிருந்தார்கள். கோளகிமடத்திற் கதிபதி சனாதனர், அங்கே ஜம்பு விருக்ஷம், அவர் சந்ததியார் அந்த மடாதிபதிகளாயிருந்தார்கள். ரண பத்ரமடத்திற் கதிபதி சனந்தர், அங்கே வட விருக்ஷம், அவர் சநததியார் அந்த மடாதிபதிகளாயிருந்தார்கள். கோதாவரீதீரத்தில் சைவர்கள் வாசஞ்செய்யும் மந்த்ரகாளி யென்னு மோர்பட்டண முண்டு, அங்கே சிவன் வாசஞ்செய்கிறார். அவ்விடத்தில்தான் சைவாசாரியர்கள் விசே ஷமா யுண்டாயிருந்தார்கள். அவ்விடத்தில் மந்த்ரகாளீசுவரரைச் சூழ ஆமர்த்தக முதலான இந் நான்கு மடங்களு மிருந்தன' என மடங் களின் வரலாற்றை விரித்தார். அடுத்த சுலோகவுரையில் 'ஸ்வாயம்புவ மனுகாலத்தில் ஆமர்த்தகமட ஸம்ப்ரதாயம் ஒன்றாய் ருஷி ஸம்ப்ரதாயமா யிருந்தது. பின்பு ஸ்வாரோசிஷமனு காலத்தில் ஆமர்த்தக முதலாக நாலு மடங்களாயின. நாலுவித ஸம்ப்ரதாயமுள்ள மடங்களிலுண்டான சைவப்பிராமணரும் பிரமசாரி கிருஹஸ்தர் வானப்பிரஸ்தர் யதி என நாலு

விதமர்யினர். திரிலோசன சிவாசாரியருடைய சந்ததிக் கிரமம்: நாலுவித் மட ஸம்ப்ரதாயங்களுக்குள்ளே ஜலஸ்நாநாதிகளால் வந்த புறத்தூய்மையும் இந்திரிய நிக்கிரகத்தால் வந்த அகத்தூய்மையும் உள்ள காசியபாதி ஸத் ஸந்ததியையுடைய ஆமர்த்தகமடத்திலிருந்து கலியுகாதி காலத்தில் போக மோக்ஷப்ரதராகிய வியாபக சம்புவென்னும் மஹா குருவானவர் உண் டானார். இப்படிப் பூர்வ காலத்திலிருந்து குருபாரம்பரியத்தோடு கூடிய வம்சக்கிரமமானது தம்முடைய உற்பத்திகாலம்வரையில் கிரமமாக வந்ததென்றறிக. பூர்வகதை: ராஜேந்திர சோழ னென்னும் பெயருள்ள சோழராஜனொருவன் பூமியாளுங்காலத்தில் கங்காஸ்நானத்திற்குப் போன போது அவ்விடத்தில் சைவாசாரியர்களைக் கண்டு ஸ்நானஞ் செய்து திரும்பி வரும்போது அந்த சைவாசாரியர்களை யழைத்துக்கொண்டு வந்து தன்னுடைய ராஜ்யத்தில் ஸ்தாபித்தான். அதுமுதல் காஞ்சி மண்டலத்தி லும் சோழ மண்டலத்திலும் எங்கும் சைவ ஸம்ப்ரதாயம விஸ்தாரமாயிற் றென்றறிக' என சைவ ஸம்ப்ரதாயம் எங்கும் பரந்தமையை விளக்கினார்.

ஞானாமிர்தப் பதிப்பிற்கு முற்சேர்புகளிலொன்றில் அந் நூலாசிரியர் வரலாறு கூற வந்த பதிப்பாசிரியர் தருமபுரவாதீன முதல்வராகிய ஸ்ரீ குரு ஞானசம்பந்த தேசிகர் அருளிய முத்திநிச்சயத்திற்கு வெள்ளியம்பலத் தம்பிரான் இயற்றிய பேருரையிற் சைவசந்தானத்தை விளக்கியதை எடு த்துக் காட்டினர். அப் பேருரைகாரர் திருமூலதேவர் திருமந்திரத்தில்

> நந்தி யருள்பெற்ற நாதரை நாடிடி
> னந்திக ணால்வர் சிவயோக மாமுனி
> மன்று தொழுத பதஞ்சலி வியாக்கிர
> ரென்றிவ ரென்னோ டெண்மரு மாமே

என்று குறித்த எட்டுச் சந்தானங்கள் விரிந்தவாற்றை விளக்கியுள்ளார்: 'நந்திகள் நால்வர் சனகர் சனற்குமாரர் சனநதனர் சனாதனர். ஆதியிற் சனகராற் சம்பு சந்தானமும் மலையமான் சந்தானமுமென இரண்டாய்ப் பின் பலவாயின. சனற்குமாரரால் விஞ்ஞானதேவர் சநதானமும் மெய் கண்டதேவர் சந்தானமுமென இரண்டாய்ப் பின் பலவாயின. சனந் தனராற் சிவமண்ணியதேவர் சந்தானமும் பரமதேவர் சந்தானமும் சிவா னந்தபோதர் சந்தானமுமென மூன்றாய்ப் பின் பலவாயின. சனாதனராற் பிரமதேவர் சந்தானமும் சிங்கநாததேவர் சநதானமும் என இரண்டாய்ப் பின் பலவாயின. சிவயோகமாமுனிவரால் வாமதேவர் சந்தான மொன் றாய்ப் பின் பலவாயின. பதஞ்சலி முனிவரால் நிறைந்தநாயனார் சந்தான மொன்றாய்ப் பின் பலவாயின. வியாக்கிரபாத முனிவராற் சத்தியோஜாத

தேவர் சந்தானமொன்றாய்ப் பின் பலவாயின. திருமூலதேவராற் பிரமதேவர், இந்திர தேவர், விஷ்ணு தேவர், உருத்திர தேவர், கந்துருமகாவிருடிகள், காலாக்கினியுருத்திரர், கஞ்சனூர் மலையமான் என எழுவகைச் சந்தானமாய்ப் பின் பலவாயின. இன்னும் விரிக்கிற் பெருகும். இவர்கள் யாவரும் ஞானசித்தாந்த குரவர்கள். இவர்கள் வரலாற்றின் விரிவைச் சந்தான வரலாற்றானும் சந்தான வகவலானுங் கண்டுணர்க.'

## சைவமடங்கள்

சுத்தசைவ ஆதீனங்கள் பதினெட்டென அபிதானசிந்தாமணி உரைக்கும். அவை

திருவாவடுதுறை யாதீனம்
காஞ்சிபுரம் ஞானப்பிரகாசராதீனம்
தருமபுரவாதீனம்
சூரியனார்கோவிலாதீனம்
ஆகமசிவப்பிரகாச ராதீனம் (சிதம்பரம்)
செங்கோலாதீனம் (திருநெல்வேலி)
திருஞானசம்பந்தராதீனம் (மதுரை)
திருவண்ணாமலையாதீனம் (குன்றக்குடி)
இராமேசுவராதீனம்
நீலப்பாடியாதீனம் (தஞ்சை)
தாயுமானசுவாமிகளாதீனம்
சாரமாமுனியாதீனம் (திரிசிரபுரம்)
சொர்க்கபுரவாதீனம் (அம்பர்மாகாளம்)
வேளாகுறிச்சியாதீனம் (கல்லடைநகர்)
வள்ளலாராதீனம் (சீகாழி)
வரணையாதீனம (யாழ்ப்பாணம்)
நாய்ச்சியார்கோவிலாதீனம்
நிரம்பவழகியதேசிகராதீனம் (துழாவூர்).

இவற்றுள் பிரசித்தமானவை திருவாவடுதுறையாதீனமும் தருமபுரவாதீனமும். பெரும்பாலன காஷாயதாரிகளான துறவிகள் தலைமை வகிக்கும் மடங்கள், வேளாகுறிச்சியாதீன முதலிய வைந்தும அபிஷிக்தர் கிருஹஸ்தராயிருந்து தலைமை வகிக்கும் மடங்கள். எல்லா மடங்களும் திருக்கைலாய பரம்பரையைச் சார்ந்தனவென்றே கூறப்படும், திருவாவடுதுறைக்கும் தருமபுரத்திற்கும வரலாறுகள் புத்தகங்களாக எழுதப்பட்டு வெளிவந்துள்ளன.

## சந்தானகுரவர்

திருவாவடுதுறை தருமபுர முதலிய சைவமடங்கள் திருக்கைலாய பரம்பரையென்று சொல்லுதலின் கருத்து அவற்றிற்கு முதல்வர் ஸ்ரீகண்ட பரமசிவனார் என்பதே. அவர் நந்தீசுவரர்க்கு உபதேசித்தார். நந்தீசுவரர் சனற்குமார முனிவர்க்கு உபதேசித்தார். சனற்குமார முனிவர் சத்திய ஞானதரிசனிகளுக்கு உபதேசித்தார். சத்தியஞான தரிசனிகள் பரஞ்சோதி முனிவர்க்கு உபதேசித்தார்.

சைவசித்தாந்தத்துக்குத் தமிழ்முதனூலாகிய **சிவஞானபோதஞ்** செய்தருளிய மெய்கண்டதேவர் அதனை வடமொழியினின்றும் மொழி பெயர்த்தாரென்றும் அவர்க்கு உபதேசஞ் செய்தவர் திருக்கைலாயத்தி னின்றும் எழுந்தருளிவந்த பரஞ்சோதிமுனிவரென்றும் பரம்பரையாக வழங்கிவருகின்றது. மெய்கண்டதேவர் சிவஞானசித்தியாரும் **இருபாவிரு பதும்** அருளிச்செய்த அருணந்திதேவர்க்கும், அவர் மறைஞானசம் பந்த தேவர்க்கும், அவர் சிவப்பிரகாசாதி நூல்களியற்றிய உமாபதி தேவர்க்கும் உபதேசித்தனரென்ப. இந் நால்வரையுமே சந்தான குரவ ரென்றுரைப்பர்.

## சூரியனார்கோவிலாதீனம்

இவ்வாதீனமும் திருக்கைலாய பரம்பரையைச் சார்ந்ததென்று சொல்லப்படுமாயினும் அதன் சந்தானமுறை வேறு. ஸ்ரீகண்ட பரமசிவ னிடத்தில் உபதேசம்பெற்ற ஸ்கந்தஸ்வாமியால் உபதேசிக்கப் பெற்ற வாமதேவ மஹர்ஷி தாம பெற்ற பிரணவார்த்தத்தையும் **சர்வஞானோத்தர** மென்னும் ஆகமத்தையும நீலகண்ட சிவாசாரியருக்கு உபதேசித்தனர். நீலகண்ட சிவாசாரியர் விசுவேசுர சிவாசாரியருககும, விசுவேசுர சிவா சாரியர் சதாசிவ சிவாசாரியருக்கும், சதாசிவ சிவாசாரியர் சிவமார்க்கப் பிரகாச சிவாசாரியருக்கும், சிவமார்க்கப்பிரகாச சிவாசாரியர் சிவாக்கிர யோகிகளென்னும் சிவக்கொழுந்து சிவாசாரியருக்கும் பரம்பரையாக உபதேசித்தனர். உபதேசக் கிரமம் ஸ்கந்தஸவாமியிடத்திருந்து பரம்பரை யாக வருதலின் இவரனைவரும் ஸ்கந்த பரம்பரையின ரெனப்படுவா. ஸ்ரீ பரமேஷ்டிகுருவாகிய சதாசிவ சிவாசாரியர் பெயரை வைத்துச் சதாசிவ சந்தானத்தினரென்பது முண்டு. சிவக்கொழுந்து சிவாசாரியர் அருக்கவனமென்னும சூரியனார்கோவில் தெற்கு வீதியிலே ஆதீனஸ்தாப னஞ் செய்து தம்மைச் சரணடைந்த பக்குவர்கட்கு ஞானோபதேசஞ் செய்திருந்தனர்.

அக்காலத்து, தொண்டைநாட்டிலே பிராமண குலத்தி லவதரித்துச் சகல கலைகளையுங் கற்ற பக்குவரொருவர் சிவக்கொழுந்து சிவாசாரிய

ருடைய பெருமையைப் பற்றிக் கேள்வியுற்று விரைந்து அவர் திருமுன் புற்று வணங்கினர். ஆசாரியரும் வந்து வணங்கினவரது அதிதீவிர பக்குவத்தைக் கண்டு மகிழ்ந்து ஞானவதியால் நிருவாணதீக்ஷை செய்து சைவசன்னியாசங் கொடுத்துத் தமது பரம்பரைக்குரிய பிரணவார்த்தம் சர்வஞானோத்தராதிகளை யுபதேசித்து ஆசாரியாபிஷேகஞ் செய்து 'சிவாக்ரயோகி' யென்னும் தமது பட்டாபிதானத்தையுஞ் சூட்டித் துவிதீய குரவராக்கினர். 'இங்ஙனம் அனுக்கிரகம் பெற்ற துவிதீய குரவர் தமது ஆசிரியர் அருளியவாறே சிந்தித்துத் தெளிந்து பரமான்மாவாகிய சிவமும் தாமும் வேறற விளங்கும் சிவானந்த நிட்டையிலே இடையறாது வீற்றிருந்து வர்ணாச்சிரமாதீதராக விளங்கினமையின் அதிவர்ணாச்சிரம சிவாக்கிர யோகியெனப் பெயர்பெற்றனர்.

'அக்காலத்திலிருந்த தஞ்சையரசன் இவ்வாசாரியர்களது பெருமையைப் பலராலுங் கேள்வியுற்றுச் சூரியனார்கோவிலுக்கு வந்து குருமூர்த்திக ளிருவரையுந் தரிசித்து வணங்கித் துவிதீய குரவராகிய அதிவர்ணாச்சிரம சிவாக்கிர யோகிகளைத் தந்தச் சிவிகையில் விருதுகளோடு தஞ்சைக்கு அழைத்துச் சென்று தனிமடத்தில் வைத்து உபசரித்துச் சைவசமய பரிபாலனஞ் செய்வித்துக்கொண்டிருந்தான்.

'அந் நாளில் ஸ்ரீவைஷ்ணவராகிய மணவாளமாமுனியென்பவர் தமது சிஷ்யர்களோடு அரசனிடஞ் சென்று வைணவ சமயத்தை இந்த நாடெங்கும் பரவச் செய்யவேண்டுமென்று கூற அதற்கு அரசன் உடன்படாதது கண்டு, "சைவசமய பரிபாலகராகிய சிவாக்கிரயோகிகளோடு வாதஞ் செய்து வென்று எமது சமயத்தைத் தாபிப்பேன். அதற்கு அனுமதி கொடுத்தல்வேண்டும்" என்றனும், அரசன் சிவாக்கிரயோகி தேசிகர்க்குத் தெரிவித்து அவர் உடம்பாடுபெற்று வாதசபையொன்று கூட்டிப் பதினெட்டு நாட்களுள் வாதத்தில் தோற்றவர் தம் சமயத்தை விட்டு வென்றவர் சமயத்தில் சேர்ந்து விடுவதென்று உத்தரவளித்தான்.

'இருதிறத்தாரும் அவ்வாறே ஒட்டிக்கொண்டு வாதஞ் செய்யுங்கால் பதினேழுநாள்காறும் தமக்குத் தோல்வியே வருதலைக் கண்ட வைணவர் பதினேழாம் நாள் இரவிலே சிவாக்கிரயோகிக ளிருந்த திருமடத்தில் சுற்றிலும தீகொளுவிச் சென்றனர்.

'மறுநாள் காலையில் இச் செய்தியை ஊர்காப்போரால் அரசனறிந்து மனம்பதைத்து விரைந்துசென்று அக்கினி மத்தியில் திருமேனிக்குத் தீங்கின்றிச் சிவயோகத் தமர்ந்திருந்த ஆசிரியரைத் தரிசித்து அச்சமும்

ஆச்சரியமும் எய்தி வணங்கிநின்று, "குரவர் சிகாமணியே, இத் தீங்கு காண்பதற்கோ தேவரீரை இங்கெழுந்தருளுவித்தேன். என் பிழை பொறுத்தருள்க" என்று பன்முறை வணங்கியெழுந்து ஆசிரியரது பெருமையைப் புகழ்ந்து பின்பு மறைந்தோடாதிருந்த வைணவரைத் தண்டித்தனன்.

'பின்பு சிவாக்கிர யோகிகள் அரசனை விளித்து, "நாம் சைவசமயாசாரியர்கள் பன்னெடுநாள் எழுந்தருளியிருந்து சைவசமய பரிபாலனஞ் செய்யப்பெற்றதும், திருமால் நேத்திரார்ப்பணஞ் செய்து சக்கரம் பெற்றதும், இன்னும் அத்தியற்புத மகிமைகள் பல வாய்ந்ததுமாகிய திருவீழிமிழலையில் வசிக்க விரும்புகிறோம்" என்றலும், அரசன் திருவீழிமிழலையிலே தெற்குவீதியில் ஒரு மடங் கட்டுவித்து அதில் சிவாக்கிரயோகிகளை எழுந்தருளுவித்து உபசரித்து வந்தான். சிவாக்கிரயோகிகள் அத் தலத்தில் சைவசன்னியாசிகளாகிய பல மாணவர் சூழ வீற்றிருந்து சைவநெறி வளர்த்து வந்தார். இதனால் இவ்வாசாரியர்க்கு வீழிச் சிவாக்கிர யோகிகள் எனப் பெயர் வழங்கிற்று.

'இங்ஙனம் நிகழுநாளில் ஸ்மிருதிநெறிபற்றி யொழுகுவோர் சிலர்க்கும் சிவாகமநெறி யொழுகும் நான்காம் வருணத்தவர்களுக்கும் சன்னியாச விஷயமான விவாதமுண்டாக, இருதிறத்தார்களும் அரசனிடஞ் சென்று தங்கள் விவாதத்தை முடிவுசெய்யவேண்டுமெனத் தெரிவித்தனர். அரசன் திருவீழிமிழலையிலிருக்கும் சிவாக்கிரயோகிகளிடம் தெரிவித்தனன். சிவாக்கிர யோகிகள் அவ் விவாதத்தைத் தக்க பிரமாண வாயிலாகச் சமாதானஞ் செய்து நான்காம் வருணத்தவர்களுக்கும் சன்னியாசம் உண்டென்பதை நிரூபித்து அவர்கள் அநுஷ்டிக்கவேண்டிய ஸ்நானம் சந்தி பூசை தீக்ஷை சன்னியாசம் முதலியவற்றை விரித்து விளக்கும் எட்டுப் படலங்களையுடைய சிவாக்கிரபத்ததி யென்னும் கிரியாதீபிகையையும், நான்கு வருணத்துச் சன்னியாசிகளும் அநுஷ்டிக்கவேண்டிய விதிகளை விளக்கும் எட்டுப் படலங்களையுடைய சைவசந்நியாசபத்ததியையும் செய்து, சைவசந்நியாசபத்ததியில்

ஸ்ரீகண்டாத்யவதாரவுத்தம ஜடவதிவ்யாஜ்யேவத்ராஸநகவ-
வ்யாஸதீர்க நஸேஹாவமாஹரிகா நாவெவ்யாவகணவஸ்வெ ।
கஸ்யாஷ்யரிதவொடிநிஷ்பாவபாகூபணாரிராணணஸ்ரீ
கொடிரொகூஸெணள வஷாஸிவஷேஹாராயெ ஷஹீம் ரக்ஷதி ॥

தஸ்யாஜ்ஞாவஶவர்திகே ஶிவேபீவாணாப்திபூஸம்மிதே
கந்யாயாம் நவஸாஹஸஶ்ரீஶிகிராஸ்யந்த்ராக்ரஹாராபிதே ।
ஸஹ்யாத்ரீவரகந்யகாஸஹவஶீம் ஶ்ரீஶைவஶைவாஶ்ரயாம்
வேதாஷ்டாக்ஷரம் விதவ்யாப்யாந்தந்த்ரவே தஜ்ஜ்ஞாவரே ஶாஸதி ॥
ஸதாஶிவாசார்யதயாநவாப்ய ஶிவாக்ரயோகீந்த்ரகருணயாஸ் ।
ஶிவாக்ரயோகீ ஜகதேகஸந்ந்யஸ்ய ஶைவஸந்ந்யாஸவிதிம் கரோதி ॥

எனத் தஞ்சையரசனைச் சிறப்பித்துப் பாயிரமுஞ் செய்தனர்.

[தஞ்சையரசனைக் குறித்த இச் சுலோகங்கள் ஸ்ரீ சிவாக்கிர யோகிகள் காலத்தை நிர்ணயித்தற்கு ஒருவாறு உதவும். விஜயநகரத்தை யாண்ட மன்னன் சதாசிவராயன் காலம் கி. பி. 1543-1573 எனத் தெரி கின்றது. அவனாணையின்கீழ்த் தஞ்சையை யாண்ட நாயக்க மன்னன் சின்னசேவப்பயாச்சுதன் என்னும் பெயராலும் வழங்கப்பட்ட அச்சுதப்ப னாகல் வேண்டும். அவன் காலம் கி. பி. 1572-1614 ஆகுமெனக் கூறப் படுகிறது. இவ்விரு மன்னரின் காலத்தையும் ஒப்பு நோக்கின் சதாசிவ ராயன் விஜயநகரத்தை யாண்ட காலத்தில் அச்சுதப்பன் தஞ்சையை யாண்டானென்றல் ஐயத்தின் பாலதாம். ஆயினும், மேற்கண்ட கால வரையறை சிலாசாஸனங்களைக்கொண்டு ஏற்பட்டது. இவ்விடத்து, நூல் செய்த காலத்தே ஏற்பட்ட பாயிரம சிலாசாசனத்தினும் அதிக வலி யுடையதென்பது உணரத்தக்கது. அன்றியும், 1578-ம் ஆண்டுச் சிலா சாஸனமொன்று சதாசிவராயன் அவ்வாண்டில் அரசுபுரிந்துகொண் டிருந் தானெனச் சாற்றுமெனத் தென்னிந்திய சரித்திர சாசனங்கள் (Sewell) என்னும் நூல் உரைத்தது. ஆதலால் சதாசிவராயன் காலத்தேயே சின்னசேவப்பயாச்சுதனும் இருந்தானாகல் வேண்டும். இனி, இலக் கணவிளக்க ஆசிரியர் பரமபரை திருவாளர் ச. சோமசுந்தர தேசிக ரவர்கள் மேற்காட்டிய சுலோகங்களில் ஶிவேபீவாணாப்திபூ என்பது ஶிவாஃ 6, இபீவாணாஃ 8, அப்திஃ 4, பூஃ 1, எனப் பொருள் பட்டு, 1486-ம் சக ஆண்டைக் குறிக்குமென்று எடுத்துக் காட்டினர். 1486-ம் சக ஆண்டுக்குச் சரியான கி. பி. ஆண்டு 1564-ஆகும். ஆயின் இந்நூலியற்றப்பட்ட காலத்தில் சின்னசேவப்பயாச்சுதன் இளவரசனா யிருந்தானாகல் வேண்டும். எவ்வழியால் நோக்கினும் ஸ்ரீ சிவாக்கிரயோகி கள் காலம் கி. பி. 16-ம் நூற்றாண்டின் பிற்பாதியாதல் ஒருதலை. இன்னும், மணவாள மாமுனிகள் காலம கி. பி. 1370-1444 என வைணவ குரு பரம்பரை யுரைப்பது உண்மையாயின் ஸ்ரீ சிவாக்கிரயோகிகளும் மணவாள மாமுனிகளும் ஒரேகாலத்திருந்தனரென்றல் கூடாதாகும்.]

[1. க்ரியாதீபிகா—ஸ்ரீ கௌஶிகவம்ஶோத்பவ ஸ்ரீ ஜ்ஞாநஸம்பந்த ஸ்ரீ க்ருஷ்ணாசார்யவர்யப்ரபௌத்ர ஸ்ரீ ஶிவஜ்ஞாநதேஶிகஶிஷ்யவர்யைஃ ஸ்ரீஸூர்யநார்கோயிலாதீநஜ்ஞாநஸாம்ராஜ்யபதிபிஃ ஸ்ரீமதாசார்யவர்யஶைவஸமயவரிஷ்ட ஶிவாக்ரயோகீந்த்ரஜ்ஞாந-ஶிவாசார்யஸ்வாமிபிஃ விரசிதா—சென்னை, 1929. $9\frac{1}{2} \times 6\frac{1}{4}$. பதிப்புரை பக். க-ச. விஷயஸூசீ பக். க-ச. க்ரியாதீபிகா பக். க-உஎஉ. ஶைவாத்வைதஜ்ஞாநஶிவாசார்யவிரசிதாயாம் ஶைவதந்த்ரதீபிகாயாம் ஶைவாகமஸாரஸங்க்ரஹஃ பக். க-எ. ஶுத்தாஶுத்தபத்ரிகா பக். க-உ.

2. ஶைவஸந்ந்யாஸபத்ததிஃ— கும்பகோணம், 1932. $8\frac{1}{2} \times 5\frac{1}{4}$. Foreword pp. i–iv. முகவுரை பக். க-ரு. வாழ்த்துப்பாக்கள் பக். க-ரு. சந்தானகுரவர்கள் பரம்பராவிளக்கம் பக். க. விஷய அட்டவணை பக். க-எ. ஸூசிகா பக். க-ரு. உபோத்காதஃ பக். ச-ரு. விஷயஸூசிகா பக். 1–10. ப்ரமாணதயோதாஹ்ருதக்ரந்தஸூசிகா பக். 1–2. பத்ததி பக். க-கஎச. ஶுத்தாஶுத்தஸூசிகா பக். 1–6.]

'அதன்பின் வழக்கம்போலச் சூரியனார்கோவிலிற் சென்று தமது ஆசிரியரைத் தரிசித்துவருங் காலங்களில் அவ்வாசிரியர் கட்டளையிட் டருளியபடி வடமொழிச் சிவஞானபோதத்துக்குச சங்கிரகவியாக்கியான மென ஒரு சிற்றுரையும் சிவாக்கிரபாஷ்யமென ஒரு பேருரையும் செய் தனர். இப் பாஷ்யத்தில் தமது சந்த பரம்பரையில் உபதேசிக்கப்பெற்று வரும் சர்வஞ்ஞானோத்தரத்தின் ஞானபாதத்துக்கு அகோர சிவாசாரியர் செய்த சிவசமவாதவுரையையும் மறுத்தனர்.

[3. ஶிவஜ்ஞாநபோதஃ ஶிவாக்ரயோகிவிரசிதலகுடீகாஸஹிதஃ—காஶீ, 1908. $8 \times 5$. நாகரிலிபி. பக. 1–8.

ஸ்ரீ சிவஞானபோதலகுடீகை. தஞ்சை ஸ்ரீமத் பிரம்மானந்த ஸ்வாமிகள் மொழிபெயர்ப்பு—தஞ்சை, 1928. $5\frac{1}{2} \times 4\frac{1}{2}$. முகவுரை பக். 1. நூல் பக். 1-23.

4. ஸ்ரீ ஶிவஜ்ஞாநபோதஃ ஸ்ரீமச்சிவாக்ரபாஷ்யோபேதஃ— கும்பகோணம், 1920. $9\frac{1}{4} \times 6$. ஸூசிகா பக். க-ரு. தமிழ் முன்னுரை பக். எ-கஉ. விஷயஸூசிகா பக். க-அ. ப்ரமாணதயோதாஹ்ருதக்ரந்தஸூசீ பக். க-உ. பாஷ்யம் பக். க-ருருஎ. ப்ருஹஸ்ஸூத்ராநுஸாரஜ்ஞாநம் பக். க-ரு. ஶுத்தாஶுத்தபத்ரிகா பக். க-உரு.

ஸ்ரீ சிவஞானபோதம் முதற்சூத்திரம் ஸ்ரீ சிவாக்கிரபாஷ்யத்தில் ஸங்க்ரஹபாஷ்யம் என்னும் முற்பகுதி, ஸ்ரீ சிவப்பிரகாசபண்டிதர் மொழிபெயர்ப்போடு—சென்னை, 1916. $9\frac{1}{4}\times 6$. முகவுரை பக். க—உ. நூல் பக். க—சஅ.]

'பின்பு சிவாக்கிரபாஷ்யங் கற்கும் மாணாக்கர் அதற்கு முன் ஒரு தலையாக ஓதியுணர்தற்பாலனவாகிய சித்தாந்தப் பொருள்களைச் சுருக்கி விளக்கும் கத்தியரூபமான ஐந்து பரிச்சேதங்களையுடைய சைவபரிபாஷையையும் வடமொழியிற்றானே செய்தருளினர்.

[5. சைவபரிபாஷை அச்சானதாகத் தெரியவில்லை. சுன்னாகம் அ. குமாரசுவாமிப் புலவர் தமது தமிழ்ப்புலவர்சரித்திரத்தில், 'சைவபரிபாடையிலே பிரத்தியக்கம் அநுமானம் முதலிய பிரமாணங்களை விரித்து விளக்கி அவை வாயிலாகச் சிவபரத்துவமும் ஆன்மநிரூபணம் முதலியனவுந் தாபித்தவர்' என்று இந் நூற்பொருளை யின்னதெனத் தெரிவித்தனர். ஶைவபரிபாஷா என்னும் பெயரால் ஸ்ரீ ஸூர்ய சிவாசாரியர் செய்ததும் ஆறு பரிச்சேதங்களோடு கூடியதுமாகிய ஒரு நூல் தேவகோட்டை சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கத்தாரால் வெளியிடப்பட்டுள்ளது. அதற்குத் தமிழ்மொழிபெயர்ப்பொன்றும் அவர்களே வெளியிட்டுள்ளனர்.]

'சர்வஞ்ஞானோத்தரம், தேவிகாலோத்தரம், அரதத்தாசாரியர் செய்த சுருதிசூக்திமாலை முதலியவைகட்குத் தமிழுரையுஞ் செய்தனர்.

[6. சர்வஞ்ஞானோத்தரம் தமிழுரை அச்சாகவில்லை. சர்வஞானோத்தரம் ஞானபாதம் தமிழ் மூலம் எனப் பெயர்கொண்ட 69 செய்யுட்களாலாகிய ஒரு தமிழ்நூல் 1909-ல் வெளிவந்தது. இதுவே திரு. பொ. முத்தையபிள்ளை எழுதிய முததிரத்நமென்னும் விருத்தியுரையோடு 1923-ல் வெளிவந்தது. அதற்கு முற்சேர்பாக சர்வஞ்ஞானோத்தரத்தின் ஸம்ஸ்க்ருத மூலம் கிரந்த லிபியில் காணப்படுகிறது. ஸ்ரீ சர்வஞ்ஞானோத்தரம் ஸம்ஸ்க்ருத மூலம் நாகரி லிபியில் ஸ்ரீ. வி. பிரஹ்மானந்தஸ்வாமிகள் மொழிபெயர்ப்போடு 1933-ல் தஞ்சையில் அச்சாகி வெளிவந்தது. இவ்விரண்டு பதிப்புக்களிலும் ஸமஸ்க்ருத மூலம் சிறிது சிறிது பேதப்படுகிறது. அரசினர் கையெழுத்து நூல்நிலையத்தில் தெலுங்கு லிபியில் ஒரு பிரதியுளது. அதுவும சிறிது வேறாயிருக்கின்றது. சிவஞானபோதச் சிவஞானபாடியத்துள் ஆறாஞ் சூத்திரத்திற்குப் பொருளுரைக்குங்கால் பாடியகாரர் சர்வஞ்ஞானோத்தரத்தின் பொருளைத் தொகுத்து விளக்கியுள்ளார்.

7. தேவிகாலோத்தரம் தமிழுரை அச்சாகவில்லை. தேவிகாலோத்தர உரை பாடம் என்றொரு தமிழ்நூலின் மூன்றாம பதிப்பு 1906-ல் வெளிவந்தது. முதற்பதிப்பு 1875-ல் வெளிவந்ததுபோலும். இதுவே திரு. பொ. முத்தையபிள்ளை இயற்றிய சித்தாந்ததீபமென்னும் விருத்தியுரையோடு சிவபெருமான் உமாதேவியாருக்கு உபதேசித்தருளிய தேவி காலோத்தர ஆகமம் என்னும் பெயரால் 1935-ல் வெளிவந்தது. முன்னுரை மாயாவாதசம்பந்தமுடையதா யிருப்பதனால் இது தோன்றுதற்கு ஏதுவாயிற்றென விருத்தியுரைகாரர் தம் முகவுரையிற் கூறினர். தேவிகாலோத்தரவ்ருத்தி என்னும் பெயரால் ஸம்ஸ்க்ருத மூலமும் விருத்தியும் 1913-ல் வெளிவந்தது. இதில் 85 சுலோகங்கள் காணப்படுகின்றன. ஸ்ரீ தேவிகாலோத்தரம் ஞானசார விசார படலம் திருவண்ணாமலையில் வீற்றிருக்கும் ஸ்ரீ ரமணமஹர்ஷிகளால் சுலோகத்திற்கோர் வெண்பாவாக எழுதப்பட்ட 85 வெண்பாக்கள் கொண்ட தமிழ் நூலின் இரண்டாம் பதிப்பு 1924-ல் வெளிவந்தது. 1913-ல் வெளிவந்த முதற்பதிப்பில் மொழி பெயர்ப்பாசிரியராகிய மஹர்ஷிகள் பெயர் காணப்படவில்லை.

8. அரதத்தாசாரியர் செய்த சுருதிசூக்திமாலை தமிழுரை அச்சாகவில்லை. ஶ்ருதிஸூக்திமாலா ஸம்ஸ்க்ருத மூலம் சிவலிங்க பூபதியியற்றிய சதுர்வேததாதபர்யஸங்கரஹம் என்னும் வியாக்கியையோடு 1925-ல் வெளிவந்தது. இது 151 சுலோகங்கள் கொண்ட நூல். சபாபதி நாவலர் செய்த இந்நூன் மொழிபெயர்ப்பு சதுர்வேததாற்பரியசங்கிரகம் என்னும் பெயரோடு வசனரூபத்தில 1876-ல் வெளிவந்தது. அதன் இரண்டாம் பதிப்பு 1888-லும், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் பதிப்பு 1924-லும் வெளிவந்தன.]

'சகலாகமபண்டிதரெனும் அருணந்தி சிவாசாரியர் அருளிச்செய்த சிவஞானசித்தியார் பரபக்க சுபக்கங்களுக்குப் பரமத சுவமதப் பிரமாண வசனங்கள் காட்டி உரையிட்டருளினார். (சிவஞானசித்தியாருக்கு இப்போது வழங்கும் உரைகளுள் இதுவே முற்பட்ட உரையெனத் தெரிகின்றது.)

[9. சிவஞானசித்தியார் பரபக்கவுரை அச்சாகவில்லை. திருவொற்றியூர் ஞானப்பிரகாசர் உரையும் தத்துவப்பிரகாசர் உரையும் அச்சாகியிருக்கின்றன.

10. சிவஞானசித்தியார் சுபக்கவுரை. இது மறைஞானதேசிகர், ஞானப்பிரகாசர், சிவஞானயோகிகள், நிரம்பவழகியதேசிகர், சுப்பிரமணிய தேசிகர் என்னும் ஐவர் உரைகளோடு 1888, 1889-ல் நான்கு பாகங்களாக வெளிவந்தது. அவ்வுரைகளுள் இரண்டாவதாகக் காணப்படுவது சிவாக்கிரயோகிக ளுரை. திருவண்ணாமலையாதீனம் ஞானப்பிரகாசர் உரைத் தொடக்கத்தில், 'திருமறைஞானதேசிகர் ஸ்ரீ சிவக்கொழுந்தாசாரியர் இவர்கள் சிவஞானசித்திக்குச் செய்த வுரைகள் விரிந்தபடியினாலே' என்று கூறினமையால் மறைஞானதேசிகர் உரையே பழைமையானதென்பது அவரபிப்பிராயமென்று தெரிகிறது. சிவாக்கிரயோகிகளுரைத் தனியனில்

... அருணந்தி தேவ சிவாசா ரியர்தாம்
அளியுற வுலகி லாசறப் பகர்ந்த
தெளிசிவ ஞான சித்தியி னுண்மையைச்
சிவனன் பருக்குத் தெளியமற் றதன்பொரு
ளறுவகை யின்விரித் துரைசெய் திடுகென
வாசா ரியர்குறித் தருளிச் செய்தலிற் ...
கருத்துப் பதப்பொருள் காட்டென முன்னே
ருரைத்திடும் வகையா லொண்பொருள் விரித்து ...
பான்மையிற் றெளிந்து பரமனன் பருக்கு
ஞான மென்னு நல்லமு தீந்தனன்
தரந்தவிர் பெருமைச் சதாசிவ தேசிகன்
றிருந்து சந்தானத் தீபமாய்த் தோன்றி
நிலைபெறு சத்திநி பாதர்க் கருள்வான்
மலைவறு வருண மருவுமாச் சிரமம்
பெயர்குண மென்றிவை பெறுதலில் லாமையைப்
பார்மிசை யறிவிப் பதுபொருட் டாக
வாற்றலி லதிவருணாச்சிர மியெனச்
சாற்றிட நின்ற தலைமையோ னாகி...
வீழியம் பதியின் மெய்த்தவங் கைவரு
காழி ஞானக் கவுணியன் போலச்
சைவ நன்னெறி தான்றழை வித்துப்
பரவிய சைவ பரிபால னென்று
முரைதரு சிவாக்ர யோகி யென்றுந்
திரந்தரு கருணைச் சிவக்கொழுந் தென்றும்
வரம்பின் மாதவர் வழுத்தும்
பரம்பரை நாமம் படைத்ததே சிகனே

என்று வரும் அடிகள் சிவாக்கிரயோகிகள் தம் ஆசாரிய ராணை மேற்கொண்டு சிவஞானசித்தியார்க்கு உரையியற்றினாரென்றும், அவர் சதாசிவா

சாரியர் சந்தான விளக்கென்றும், அவர்க்கு அதிவர்ணாச்சிரமி சைவபரி பாலர் என்னும் பெயர்கள் உண்டென்றும், அவர் சிவக்கொழுந்தாசாரிய ரெனத் தம் ஆசாரியர் பெயராலும் வழங்கப்படுவரென்றும் புலப்படுகிறது. பொருள்விரித்து என்றவிடத்திற் கூறியவையெல்லாம் சுபக்கப் பொருளையே குறித்தன. சுன்னாகம் அ. குமாரசுவாமிப் புலவர் தமது தமிழ்ப்புலவர்சரித்திரத்தில், 'சிவஞானசித்தியாருரையினாலே காமிகம் வாதுளம் முதலிய மூலாகமங்களையும், மிருகேந்திரம் சிவதருமோத்தரம் முதலிய உபாகமங்களையும், நியாயம் முதலிய தரிசன சாத்திரங்களையும், பலவகைப் புராணங்களையும், தென்மொழியிலே தேவாரம் ஞானாமிர்தம் முதலியவைகளையும் நன்குணர்ந்த பண்டிதர் என்பது பெறப்படுகின்றது. இவ்வுரை வடமொழியுந் தென்மொழியுங் கலந்த நடையுடையது. ஆகமச் சுலோகப்பிரமாணங்கள் பலவுடையது' என்று இவ்வுரையை வியந்திருக் கின்றனர்.]

'பின்பு சுவாந்தநாச்சியார் என்னும் ஒரு பக்குவியின் பொருட்டு இருநூற்றுப்பதினைந்து திருவிருத்தங்களையுடைய சிவநெறிப்பிரகாச மென்னும தமிழ்நூலையும அருளிச்செய்தனர். இதற்கு இந்நூலாசிரியர் அநுக்கிரகம்பெற்ற நந்திசிவாக்கிர யோகிகள் உரையிட்டருளினர்.

[இந்நூலின் பெருமை அடுத்து விரிக்கப்படும்.]

'இங்ஙனம் இருமொழிகளிலும் பலநூலும் உரைகளும் செய்து சைவசமயபரிபாலனஞ் செய்துகொண்டிருக்குநாளிலே தமது குருவாகிய சிவக்கொழுந்து சிவாசாரியர் பரிபூரணகாலஞ் சமீபித்தமையை யறிந்து சூரியனார்கோவிலுக்கு வந்து ஆசிரியா பரிபூரணங் தரிசித்து அரசனால் கோயில கட்டுவித்து ஆசிரியர் திருவுருவம் பிரதிட்டைசெய்து குருவாராதனை செய்து தமது மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த நந்தி சிவாக்கிர யோகிகளுக்கு இளவரசாக அபிஷேகம்செய்து சிலகாலம் அங்கேயிருந்து பின்பு தாம் திருவீழிமிழலையிலேயே வசிக்க விரும்பி அத் தலத்தில் சென்று சிலகாலம் இருந்து பின் தமது பரிபூரணகாலத்தை நந்திசிவாக்கிர யோகிகளுக்குத் தெரிவித்தனர். அவர் தஞ்சையரசன் முதலியோருடன் திருவீழிமிழலையிற் சென்று ஆசிரியர் பரிபூரணந் தரிசித்து அரசனால் கோயில் கட்டுவித்து ஆசிரியர் திருவுருவம் பிரதிட்டை செய்து குருவாராதனை சமாராதனை நடத்தியபின் பானுகோயிலுக்கு வந்து தாமே ஆதீன காத்தராக வீற்றிருந்து சைவசமயபரிபாலனஞ் செய்து கொண்டிருந்தனர்.'

'இம் முன்னுரையில் viii-ம் பக்கத்தில் 'இங்ஙனம் அனுக்கிரகம் பெற்ற' என்று தொடங்கி xv-ம் பக்கத்தில் 'சைவசமய பரிபாலனஞ் செய்துகொண்டிருந்தனர்' என்பதிறுதியாகவுள்ள வாக்கியங்கள் சிவஞான போத சிவாக்கிரபாஷ்யப் பதிப்பின் தமிழ் முன்னுரையிற் கண்டவை. அதிற் காணும் சிவாக்கிரயோகிகள் வரலாறு சூரியனார்கோவிலாதீனத்துத் திருக்கூட்டத்தினரால் எழுதப்பெற்றதாகலின் அதற்குமேல் பிறர் எழுதுவதற்கு ஒன்றுமில்லை. இருதலைப் பகரத்துள் காணப்படும் நூல்விளக்க முதலியன பதிப்பாசிரியர் எழுதியன.

ஸ்ரீ நந்திசிவாக்கிரயோகிகட்குப் பின் சூரியனார்கோவிலாதீனத்தில் தலைமை வகித்தவர்கள் சிவக்கொழுந்து தேசிகர், சொக்கலிங்க தேசிகர், சிதம்பரநாத தேசிகர், வைத்தியலிங்க தேசிகர், சண்முக தேசிகர், நமச்சிவாய தேசிகர், சுப்பிரமணிய தேசிகர், அம்பலவாண தேசிகர், மாணிக்கவாசகதேசிகர், முத்துக்குமார தேசிகர். இப்பொழுது தலைமை வகிப்பவர் ஸ்ரீலஸ்ரீ மீனாக்ஷிசுந்தர தேசிகரவர்கள்.

## சிவநெறிப்பிரகாசம்

ஸ்ரீ சிவாக்கிரயோகிகள் அருளிச்செய்த சிவநெறிப்பிரகாச மூலம் 215 திருவிருத்தங்கள் கொண்டது. அதற்கு உரை யியற்றிய ஸ்ரீ நந்தி சிவாக்கிரயோகிகள் ஆசிரியரால் நேரே அநுக்கிரகிக்கப் பெற்றவர். இந் நூலின் பெருமையை எனக்கு முதலில் தெரிவித்த பெரியார் சீகாழி வித்துவச்சிகாமணி ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளையவர்கள். அரசினர் கையெழுத்து நூல்நிலயத்தில மூலபாடம் இருத்தலைத் தெரிந்து அதற்குப் பிரதி யெழுதிவைத்துக்கொண்டு நூலின் அருமையை ஆராய்ந்துணர்ந்தேன். வித்துவச்சிகாமணிப் பிள்ளையவர்கள் நூலினை உரையோடு அச்சிடுவித்தல் நலமென மீண்டுங் கூறித் தம்மிடத்திருந்த பிரதியை அனுப்பிவைத்தார்கள். அப் பிரதி சீகாழி ஸ்ரீமான் ச. சதாசிவ முதலியாரவாகளிடத்தும் சீகாழி வித்துவச்சிகாமணி ப. அ. முத்துத் தாண்டவராய பிள்ளையவர்களிடத்துமுள்ள பிரதிகளையும் காசியிலுள்ள குமரகுருபர சுவாமிகள் திருமடத்துப் பிரதியையும் பார்த்து எழுதிய பிரதியென்றும் தெரிவித்தாகள். நூலும் உரையும சூரியனாகோவிலாதீனத்துத் தலைவாகளால் இயற்றப்பட்டமையால் அவ்வாதீனத்துப் பிரதியையும் ஒப்பு நோக்கியபின் அச்சிடுவித்தல நலமெனக கருதி இப்பொழுது மஹாசந்நிதானமாய் வீற்றிருக்கும ஸ்ரீலஸ்ரீ மீனாக்ஷிசுநதர தேசிகரவர்களுக்கு விஞ்ஞாபித்தபொழுது அவர்கள் தமமிடத்திலிருநத காகிதச் சுவடியைச் சிறிதும் காலதாமதமின்றி யனுப்பிவைத்தார்கள்.

முற்பிரதியில் ஆங்காங்கு விட்டிருந்த வாக்கியங்கள் இதன் துணைகொண்டு சேர்க்கப்பட்டன. இது பலவகையினும் செப்பஞ் செய்யப்பட்ட பிரதி. ஆயினும் இதிலும் சில பாகங்களில் குறை காணப்பட்டது. இரண்டு பிரதிகளிலும் 25-ம் செய்யுளின் உரையில் 'விதப்புரை' யென்னுமிடத்து வெறுமையாகவே இருக்கின்றது. தோல்வித்தான விளக்கத்தில் அபார்த்த கத்தோடு நிறுத்தப்பட்டது; ஆசிரியர் சிவஞானசித்தியார் சுபக்கத்திற்கு அருளிய உரையைக்கொண்டு அது பூர்த்திசெய்யப்பட்டது [பக். 30].

நூலினுரை முடிந்தவிடத்துக் காணப்படும்

தந்தை சிவக்கொழுந்தைத் தாள்பணிந்தே தான்றனுசை
எந்தை சிவநெறியிங் கேதென்னச்—சிந்தையால்
தேர்ந்து சிவாகமத்தைச் சேர்த்தா யிரமதனை
ஓர்ந்திடச்சொன் னன்றமிழா லும்

என்னும் வெண்பா சிவக்கொழுந்து தேசிகரைத் திருவடிகளிற் பணிந்து சுவாந்தநாச்சியாரென்னும் சிஷ்யை எந்தையே சிவநெறியை உரைத் தருளுவீரென்ன வேண்ட அவரும் சிவாகமங்களினின்றும் ஆயிரஞ் சுலோகங்களைப் பொறுக்கித் தொகுத்து அவற்றைத் தமிழாலும் உரைத் தருளினர் என்னும் பொருள்பட அமைந்திருத்தலால் சிவநெறிப்பிரகாசத் திற்கு மூலம் ஆசிரியரே தொகுத்த ஆயிரஞ் சுலோகங்கள் கொண்ட ஓர் ஸம்ஸ்க்ருத நூல் என்று ஊகிக்கவேண்டியிருக்கின்றது. ஆயினும் அப்படி யொரு நூல் இருப்பதாக உரையாசிரியர் கூறவுமில்லை, வேறுவழியில் தெரியவுமில்லை.

சிவநெறிப்பிரகாசம் என்பது சிவப்பேறுறற்காகும் வழியை விளக்குவது என்று பொருள்படும். உரைகாரர் இப் பொருளைக் கூறிய தோடு சிவமார்க்கப்பிரகாச சிவாசாரியர் என்னும் பரமகுருவின் திருநாமத்தாலும் இப் பெயர் வந்ததென்றார் (செய். 12).

உரைகாரர் உரைத்தொடக்கத்தில் நூல்வரலாறு கூறவந்தவர் 'பவநெறியை' யென்று சுவாந்தநாச்சியார் கூறியதாக ஒரு விருத்தமும், 'நன்று நன்றிங்'கென அதற்கு ஆசிரியர் விடையுரைத்ததாக ஒரு வெண்பாவும் எழுதியுள்ளார். அவை அவ்விருவரும் சாற்றியனவோ அன்றி உரையாசிரியர் அவ்விருவர் கருத்தையுமுட்கொண்டு சாற்றி யனவோ தெளியுமாறில்லை.

ஆசிரியர் வடமொழிச் சிவஞானபோதத்திற்குப் பாடியமும் சிவஞானசித்தியார்க்கு உரையும் செய்திருப்பினும் தம் சந்தானம் வேறு

யிருத்தலின் சதாசிவாசாரியர் முதலான குரவர்க்கு வணக்கஞ் சொல்லியது போல மெய்கண்டாராதி குரவர்க்கு வணக்கஞ் சொல்லிற்றலர்போலும். துர்வாசர் அகஸ்தியர் கௌதமர் ததீசியென்னும் சைவாசாரியரையும், தேவாரமுடையார் மூவரையும் வணங்கி மற்றைச் சிவனடியரைப் பொதுவாக வணங்கினர்,

நூல் முழுதும் எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தங்களா லமைந்தது. ஒரு செய்யுள்மாத்திரம் ஐந்தடிகளைக் கொண்டிருப்பது கவனிக்கத்தக்கது [செய். 211].

பாயிரத்துள் ஆசிரியர் கணபதி, சிவபெருமான், சத்தி, குமாரர் என்னும் மூர்த்திகளின் துதி சாற்றியபின்னர், ஞானகுரவர் நந்திகேசுரர் துதியும், குமரக் கடவுளிடம் உபதேசம் பெற்று ஸ்கந்த பரம்பரைக்கு விளக்காகிய வாமதேவர் துதியும், அவற்றின்பின் சைவாசாரிய சமயா சாரிய வணக்கமும், பரமகுரு சொகுரு வணக்கமும் கூறி நூல்விடயாதிகளை யுரைத்தார். பின் அளவைகளைச் சிறிது விரித்துரைத்தார். அவற்றை யடுத்துப் பதியிலக்கணமும் பசுவிலக்கணமும் பாசவிலக்கணமும் தத்துவ தாத்துவிக விலக்கணமும் விரித்துரைத்தபின் சத்திநிபாதமுண்டாம் வகை யைக் கூறித் தீட்சாபேதங்களைத் தெளிவாக வுரைத்து, தீட்சைபுரிதற் குரிய ஆசாரியர் இலக்கணத்தையும அவ்வாசாரியர் செய்யும் அத்துவசோ தனையையும் விரிவாக எடுத்துரைத்தார். அவற்றின் பின் சிவஞானத்தின் பெருமையை விளக்கினர். இறுதியில் பிற சமயிகள் கூறும் முத்திகள் முத்திகளாகாமையைக் காட்டிச் சைவசித்தாந்த முத்தியிலக்கணமுரைத்து அம் முத்தியடைதற்கு ஞானம் பிரபத்தி பத்தியென்னும் மூவகை யுபாயமுண்மையை யியம்பி நூலை முடித்தனர்.

இவ்விதமாக இந் நூல் கேவலம் பதிபசுபாசவிலக்கணமாத்திரங் கூறாது ஞானப்பேற்றிற்கு இன்றியமையாத தீட்சை அத்துவசோதனை யாதிகளையும் சிவாகமங்கள் உரைத்தபடி தெளிவாக விளக்குதலின் 'சிவநெறிப்பிரகாசம்' என்னும் பெயர் இதற்கு ஏற்றதேயாம். 'ஆகமத்தே யறிந்தபடி யறைவாம்' முதலிய சொற்றொடர்களைப் பலமுறை வழங்குத லால் ஆசிரியர்க்கு முதனூல் காமிகாதி சிவாகமங்களே என்றும், அவ்வாக மங்களிலும் ஏதேனுமொன்றை மாத்திரம் தழுவி நூலைச் செய்யாது அவையனைத்தையுங் கடைந்து உண்மையெடுப்பார்போன்று தாம் கூற வந்த ஞானபாதப் பொருளுக்கேற்ற வாக்கியங்களைத் திரட்டித் தமிழில் பெயர்த்துச் செய்தனரென்றும் எண்ணவேண்டியிருக்கின்றது.

ஆசிரியரிடத்து உபதேசம் பெற்று அவர் சம்பிரதாயக் கிரந்தங்களையும் கொள்கைகளையும் நேரில் கேட்டறியும் பாக்கியம் வாய்ந்து அவர்க்குப் பின் ஆதீனத் தலைமையை வகித்தற்கேற்றவரென மதிக்கப்பட்டு அவரால் இளவரசாக்கப்பட்ட ஸ்ரீ நந்திசிவாக்கிரயோகிகள் இந் நூலுக்கு உரையெழுதாமல் விட்டிருந்தாராயின் இக்காலத்து ஒருவர் இவ்வளவு விளக்கமாக அதற்கு உரையெழுதல் எளிதன்று. முந்நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முற்பட்ட நூலும் உரையும் காலக்கிரமத்தில் பழுதடைந்து சொற்களும் வாக்கியங்களும் ஆங்காங்கே பிறழ்ந்தும் சிறிது பாகங்கள் சிதைந்தும் மாறியிருத்தல் அதிசயமன்று. வாயாதல் (செய். 19), மொழியாக்கொண்ணீ (செய். 30), எல்லாத்திணையும் (செய். 32) முதலியவற்றை நோக்குக. மணியாலும் (செய். 187) என்பதற்குப் பொருள் விளக்கமாயில்லை. உரையில் செய்யுள்களுக்கு நேர் பொருளாகாது விளக்கமாய் வருவன இருபக்கமும்—என்னும் கோடிட்டும், சிலவிடங்களில் இருதலைப்பகரத்துள் அடக்கியும் காட்டப்பட்டிருக்கின்றன. சொற்பொருத்தம் விளங்காத இரண்டு மூன்று இடங்களில் அச்சொற்களுக்குப் பின் [?] என்னும் குறியிடப்பட்டுளது. இப் பதிப்பிற்கு ஆதாரமாயிருந்த இரண்டு பிரதிகளிலுங் காணுத் திருத்தமொன்றும் இப் பதிப்பிற் செய்யப்படவில்லை. 'ஆசாரியற்கு அன்னியனுகையால்' (செய். 38, உரை) என்றவிடத்து அநன்னியன் என்பது பொருத்தமுள்ளதாகத் தோன்றினும் அது பிரதிகளிலுள்ளவாறே பதிப்பிக்கப்பட்டது. ஆசார்ய லக்ஷணத்துள் * அங்கவிலக்கணங் கூறுமிடத்து 'தொப்புளுக்குக் கீழாயிருக்கிற ஜகனம் மூன்றுவித விசாலம் இரண்டுவிதம் இப்படி யெண்ணப்பட்ட முப்பத்திரண்டு இலக்க

---

* 'புருஷருக்குரிய இலக்ஷணங்கள் பலவாயினும் அவற்றுள் சிறப்புள்ளவைகள் முப்பத்திரண்டாம். ஐந்து இடம் நீண்டும், ஐந்து இடம் மிருதுவாயும், ஆறு இடம் உயர்ந்தும், ஏழு இடம் சிவந்தும், மூன்று இடம் விசாலமாகியும், மூன்று இடம் குறுகியும், மூன்று இடம் ஆழ்ந்தும் இருக்கவேண்டும். நீண்டிருக்கவேண்டிய ஐந்திடங்களாவன கண், கை, கதுப்பு, முழங்கால், மூக்கு என்பனவாம். மிருதுவாயிருக்கவேண்டிய ஐந்திடங்களாவன மயிர், விரல், நகம், தோல், பல் என்பனவாம். உயர்ந்திருக்கவேண்டிய ஆறிடங்களாவன நெற்றி, தோள்கள், வயிறு, அக்குள், மார்பு, புறங்கை என்பனவாம். சிவந்திருக்கவேண்டிய ஏழிடங்களாவன கடைக்கண், உள்ளங்கை, நகம், வாய், ஆண்குறி, உள்ளங்கால், உதடு என்பனவாம். விசாலமாயிருக்கவேண்டிய மூன்றிடங்களாவன மார்பு, பீஜங்கள் என்பனவாம். குறுகியிருக்கவேண்டிய மூன்றிடங்களாவன கழுத்து, முழங்காலின் கீழ், ஆண்குறி என்பனவாம். ஆழ்ந்திருக்கவேண்டிய மூன்றிடங்களாவன நமொர்பு, நெற்றியின் கீழ்ப்பாதி, உந்தி என்பனவாம்'—புருஷ சாமுத்திரிக லக்ஷணம். வராஹமிஹிரர் இயற்றிய ப்ருஹத்ஸம்ஹிதையில், 'நாபி குரல் ஸ்வபாவம் மூன்றும் ஆழ்ந்திருக்கவேண்டும், மார்பு நெற்றி முகம் மூன்றும் விசாலமாயிருக்கவேண்டும்' என்று சொல்லப்பட்டது. மற்ற இலக்கணங்களில் பேதம் அதிகமில்லை.

ணங்களும்' (செய். 171, உரை) என்னும் சொற்றொடரின் பொருள் விளங்கவில்லையாயினும் அது பிரதியிற் கண்டவாறே பதிப்பிக்கப்பட்டது. பிறவிடங்களிலும் இவ்வாறே. உரையில் பவுட்கராதி பிரமாணக் கிரந்தங்கள் குறிக்கப்பட்டவிடத்து அக் கிரந்தங்களிற் காணும் சுலோகங்களும் வாக்கியங்களும் அகப்பட்ட வரை அடிக்குறிப்பிற் காட்டப்பட்டுள்ளன. அளவையைப்பற்றி வந்த செய்யுள்களுக்கும் (செய். 18-28), அத்துவாவைப்பற்றி வந்த செய்யுட்கும் (செய். 179) உரை விரிவாக எழுதப்பட்டுள்ளது. ஆயினும் அத்துவா விளக்கத்துள் அத்துணைப்பேதம் வருதற்குக் காரணம் புலப்படவில்லை. தாம் இயற்றிய பத்ததியில் ஒரு முறையும் இந் நூலில் ஒரு முறையும் ஆசிரியர் கூறினர் என்று எங்ஙனம் துணிந்துரைப்பது?

இனி, நூல் வரலாறு கூறவந்த உரைகாரர் 'முக்கியாத்துவிதம்' தம் சந்தானத்தி லுபதேசிக்கப்பட்டதெனக் கூறுதலால் அது சைவசித்தாந்திகள் கொள்ளும் சுத்தாத்வைதத்தின் வேறோ என்னுஞ் சங்கை சிலர்க்கு உண்டாகலாம். ஆயினும் உரையகத்து வைதிகசைவ சுத்தாத்வைதம், வைதிகசைவ சித்தாந்தாத்வைத முத்தி, சைவசித்தாந்தம் முதலிய சொற்பிரயோகங்கள் காணப்படுதலாலும், நூல்வரலாற் றிறுதியிலேயே 'சிவாகமங்களிற் சாரமாயிருக்கிற வைதிகசைவ சித்தாந்தாத்துவயப் பிரதிபாதகமாய்த் திராவிட ரூபமாய்ச் சிவநெறிப்பிரகாசமென்னுஞ் சாத்திரத்தை யுபதேசித்தார்' என்று கூறப்பட்டமையாலும் இந்நூல் சைவசித்தாந்தத்தின் வேறாக ஒரு கொள்கையை யிறுத்தவந்ததென் றுரைப்பதற்கிடமில்லை.

# விஷய சூசிகை

| | | | பக்க எண் |
|---|---|---|---|
| நூல் வரலாறு | ... | ... | 1 |
| கணபதி துதி | ... | ... | 3 |
| சிவபெருமான் துதி | ... | ... | 4 |
| சத்தி துதி | ... | ... | 5 |
| குமாரர் துதி | ... | ... | 7 |
| நந்திகேசுரர் துதி | ... | ... | ,, |
| வாமதேவர் துதி | ... | ... | 8 |
| சைவாசாரிய சமயாசாரிய வணக்கம் | ... | ... | 9 |
| குரு வணக்கம் | ... | ... | 10 |
| சொகுரு வணக்கம் | ... | ... | 11 |
| அவையடக்கம | ... | ... | 12 |
| நூற்கு அதிகாரி | ... | ... | 13 |
| நூல்விடயம், பிரயோசனம், அதிகாரம், சம்பந்தம் | | ... | 14 |
| தன்மம் | ... | ... | 15 |
| பொருள், காமம் | ... | ... | 16 |
| மோட்சம் | ... | ... | 17 |
| பிரமாண வகை | ... | ... | ,, |
| இலக்கண வியல்பு | ... | ... | 18 |
| உத்தேச இலக்கண பரீக்ஷைகட்கு இலக்கணம் | | ... | 19 |
| சைவசித்தாந்தத்துக்குப் பிரமாணம் சிற்சத்தி | | ... | 20 |
| சிற்சத்திக்கு அபிவியத்தியைப் பண்ணும் கரணங்கள் | | ... | 21 |
| மூன்றுவகைப் பிரத்தியட்சம் | ... | ... | 22 |
| இந்திரியப்பிரத்தியட்ச மானதப்பிரத்தியட்ச சொரூபம் | | ... | 23 |
| சிற்பிரத்தியட்சத்தின் இருவகை | | ... | 24 |
| ஐயந்திரிபுகளின் சொரூபம் | ... | ... | 25 |
| அனுமான சொரூபம் | ... | .. | 26 |
| அனுமான வகையும் ஆகம இலக்கணமும் | ... | ... | 29 |
| ஏத்துவாபாச சொரூபம் | ... | ... | 30 |
| பதியின் ஸ்வரூப இலக்கணம் | ... | ... | 39 |
| பதியின் தடத்த இலக்கணம் | ... | ... | 41 |
| காரியமாகிய பிரபஞ்சம் கர்த்தாவையுடையது | ... | ... | 42 |
| தேகாதிகளில்லானாயினும் பதிக்குக் கர்த்திருத்துவங் கூடும் | | ... | 43 |
| பதிக்குச் சன்னிதிமாத்திர கர்த்திருத்துவம் | ... | ... | 44 |
| பதி உபாதானத்திரயங்களில் சமவாயசத்தியால் தனுவாதியை யுண்டாக்குவர் | | | 45 |
| மாயாகன்மங்களுக்கு அன்னியோன்னியாசிரய தோஷ பரிகாரம் | | | 46 |

## உரையிற் காட்டிய மேற்கோள் நூல்கள்

அசிந்த்யவிஶ்வஸாதாக்யம் [ஸம்ஸ்க்ருத ஆகமம். அச்சாகவில்லை.]

சர்வஞானோத்தரம் [ஸம்ஸ்க்ருத மூலமே உரையிற் குறிக்கப்பட்டது] ஞானபாதம் தமிழ் மூலம்—மதுரை, 1909.

சர்வஞானோத்தர ஆகமம் ஞானபாதம் தமிழ் மூலமும், பொ. முத்தையபிள்ளை எழுதிய முத்திரத்ந மென்னும் விருத்தியுரையும் [ஸம்ஸ்க்ருத மூலம் கிரந்த லிபியில் அச்சிடப்பட்டுள்ளது]—தேவகோட்டை, 1923.

ஸ்ரீசர்வஞானோத்தரம் ஸம்ஸ்க்ருதமூலம் [நாகரிலிபி, தமிழ் மொழிபெயர்ப்போடு. மேல் மூலத்திற்கும் இதற்கும் பேதமுண்டு]—தஞ்சை, 1933.

சிவஞானசித்தியார் மூலம்—

சிவஞானசித்தியார், சிவாக்கிரயோகிகள் உரை [மறைஞான தேசிகர் முதலிய அறுவர் உரையிற் சேர்ந்தது]—சென்னை, 1888, 1889.

ஶ்ரீ ஶிவஜ்ஞாநபோத: ஶ்ரீரௌரவாகமஸாரோத்ருத:—கும்பகோணம், 1920.

தசகாரியக்கட்டளை [அச்சாகவில்லை.]

பௌஷ்கராகமம், த்ரவிடடீகையுடன்—சென்னை, 1890.

4

ஸ்ரீபௌஷ்கரஸம்ஹிதா (ஜ்ஞாநபாத:) ஸ்ரீமதுமாபதி-ஶிவாசார்யவிரசிதபாஷ்யோபேதா —சிதம்பரம், 1925.

ம்ருகேந்த்ரம் ஸவ்யாக்யாநம்—சென்னை, 1890.

ஸ்ரீம்ருகேந்த்ரம், க்ரியாசர்யாபாதம், வித்யாயோகபாதத்வயபரிமிதம் ஸ்ரீபட்டநாராயணகண்டவிரசிதயா வ்ருத்த்யா தத்வ்யாக்யயா அகோரஶிவாசார்யவிரசிதயா தீபிகயா சாலங்க்ருதம்— திருவனந்தபுரம், 1928.

## சூரியனார்கோவிலாதீனம்
## ஸ்ரீலஸ்ரீசிவாக்கிரயோகிகளாகிய
## மீனாக்ஷிசுந்தர பண்டாரச்சந்நிதிகள்
சாற்றிய
## வாழ்த்துக்கவிகள்

பெருங்கடல்சூ ழுலகிலுள்ள அன்ப ரியாரும்
பெறற்கரிய சிவானுபவம் பெற்று வாழத்
திருமுனிவன் சிவாக்கிரனாந் தேசி கன்றான்
சிவனருளா லுரைத்தசிவ நெறிவி ளக்கம்
அருமையுறு செந்தமிழாங் கிலமும் வல்ல
அனவரத விநாயகன்றன் நாமங் கொண்டோன்
பெருமையுறு மறிஞரெலாங் கண்டு தேறப்
பிறங்குமச்சிட் டான்றவத்தைச் செப்பற் பாற்றே. (க)

அரனடி யார்க்கே யன்புட னமுதும்
உடுக்கையும் பொருளு முண்மையோ டீயும்
தெய்வ பக்தியிற் சிறந்தே விளங்கும்
குருமொழி தவறுக் குணமணி யாமே
தமிழோ டாங்கிலந் தங்கிய பொக்கிஷந்
தன்னகங் கொண்ட தனவா னுகும
எம்மிடம பிரியா வெழிலுறு மன்பன்
சொல்லுதல் யார்க்கும் சுலப மாமே
சொன்னசொற் றவறாச் சுந்தர வடிவன்
இன்னவன் செய்த இணையில காரியம்
ஒன்றே யுளதே யுண்மையோ டுரைப்பன்
அன்பர்க ளியாரும அரனுடன் சேரச்
சிந்தையி னினைந்து தெளிந்தகா லத்தில்
சிவாக்கிர தேசிகர் தெளிவா யியற்றிய
சிவநெறி காட்டும் சீர்ப்பிர காசம்
என்றதோர் நூலை யீச னருளாற்
கண்களாற் கண்டு கவலை யொழிந்தே
அளவிலா னந்த மடைந்தன னாகி
அறிஞர்க ளுவக்க அச்சிட் டதனைச்
சபையோர் காணத் தந்தன னன்பால்
அனவரத விநாயக னண்டவன் பெயரை
யன்புடன் றாங்கிய அன்ப னனவன்
சிவாக்கிர னருளாற் றினமும வாழ்க
செல்வமு மாயுளுஞ் சிறந்து
இப்புவி தன்னி லீசனைக் கலந்தே. (உ)

உ

விஶ்வேஶ்வராய நம:

திருச்சிற்றம்பலம்

# சிவநெறிப்பிரகாசம்

## மூலமும் உரையும்

### நூல் வரலாறு

பவநெறியை மாற்றியன்பர்க் கருளான் முத்தி
பாலிக்கப் புவிமீதில் வந்தபர குருவே
அவநெறியே செறிந்துநெடுங் காலமுழன் றதனு
லல்லலே நன்மையொன்று மான தில்லை
தவநெறியைச் சார்கிலே னேனு முன்றன்
றனுசையெனுங் கருணையினுற் சாற்ற வேண்டும்
சிவநெறியை நன்றாகச் சிறியேன் றேர்ந்தே
சேர்வரிதாஞ் சிவானுபவஞ் சேரு மாறே.

நன்றுநன்றிங் குன்மொழிதா னுசமிலா ஞானநெறி
ஒன்றுமன்றே யென்று முறுதுணைதான்—மன்றுள்
உறைவான்சொல் லாகமத்தி னுண்மை தமிழால்
அறைவா முணர்ந்திடுவென் பால்.

ஸ்ரீமத்தா யிராநின்ற மகாமேரு மத்தகத்திற் கபிலாயத்திலே உமையுடன் கூடியிருக்கின்ற ஸ்ரீகண்டபரமசிவன் தேவரிஷிகணங்கள் சேவிக்க எழுந்தருளியிருக்குஞ் சமயத்திலே, குமாரசிகரத்தினின்றும் குமாரர் எழுந்தருளி ஸ்ரீகண்டபரமேசுவரனையும் உமாதேவியாரையும் மூன்று பிரகாரம் பிரதக்ஷிணம்பண்ணிப் பன்னிரண்டு பிரகாரம் நமஸ்கரித்துத் திருவோலக்கஞ் சேவித்துக்கொண்டிருந்தார். தேவரிஷிகள் பிரசங்காப்பிரசங்கமாகத் தத்துவம் துவிதமோ விசிட்டாத்துவிதமோ அத்து

விதமோ வென்று பிரசங்கிக்கக் குமாரர் எழுந்திருந்து சுவாமியை நமஸ்கரித்து, 'தேவரீர் அனுக்கிரகம் பண்ணின ஆகமங்கள் தாமே யுக்தியுக்தமாகத் துவிதம் விசிட்டாத்துவிதம் அத்துவிதம் இவைகளைச் சொல்லுகின்றன. ஆகையால் தத்துவம் நிச்சயமாக அனுக்கிரகிக்க வேண்டும்' என்று விண்ணப்பஞ்செய்ய, அப்பொழுது ஸ்ரீகண்டபரமேசுவரன் மிகவுங் கிருபையுடையராய்த் திருநோக்களித்துச் சிரசிலே ஸ்ரீஹஸ்தம் வைத்து, 'இராசத தாமத குணத்தினாலே மூடராயிருக்கிற பெயர்க்கு அதிகாரத்துக்குத் தக்கதாக துவிதமும் விசிட்டாத்துவிதமும் சில ஆகமங்களிலே சொன்னோம். சத்தியம் சத்தியம் புனர்சத்தியம் அத்துவிதமே முக்கியம்' என்று முக்கியாதிகாரியா யிருக்கிற குமாரருக்குப் பிரணவார்த்தத்தையும் சர்வஞ்ஞானோத்தரம் என்கின்ற ஆகமத்தையும் வாமதேவர் சனகர் முதலான ரிஷிகளுங் கூடிக் கேட்க அனுக்கிரகித்தார்.

பின்பு குமாரர் அத்துவிதமே சித்தாந்தமென் றனுபவத்துக்கு வர அறிந்து சுவாமியை நமஸ்கரிக்கச் சுவாமி ஈசுவரியை விலாசத்துடனே பார்த்துக் குமாரரை ஆலிங்கனம்பண்ணி உச்சியை மோந்துகொண்டு கிருபைபண்ணி யனுப்பக் குமாரரும் அனுப்பிக்கொண்டு குமாரசிகரமே எழுந்தருளினார்.

பின்பு வாமதேவமகரிஷியும் சுவாமி சன்னிதியில் அனுப்பிக்கொண்டு குமாரசிகரத்திலே குமாரருடைய சன்னிதியிலே வந்து மூன்று பிரகாரம் பிரதக்ஷிணம்பண்ணிப் பன்னிரண்டு பிரகாரம் நமஸ்காரம் பண்ணி, 'சுவாமி, அடியேனுக்கு முக்கியாத்துவிதத்தையும் பிரணவார்த்தத்தையும் விளங்க உபதேசிக்கவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய, குமாரர் வாமதேவமகரிஷியைப் பார்த்து, 'சகலமாயிருக்கிற ரகசியமும் நீர் சிவனிடத்திலேநின்றும் அறிந்திருக்கிறீர்; நீர் அறியாததாக ஒன்றுமில்லை; வாமதேவர் முத்தரென்று வேதத்திலே சொல்லப்படுகிறவர்; பஞ்சாக்ஷரத்துக்கு ஆதிரிஷியாயிருக்கிறவர்' என்று அநேகமாகத் திருவுளம்பற்ற, அதற்கு வாமதேவமகரிஷி, 'கிஞ்சிஞ்ஞராய் மலபெத்தராயிருக்கிற செந்துக்கள் அடியேங்கள். தேவரீர் நின்மலராய்ச் சர்வஞ்ஞராயிருக்கிற பதி' யென்று விண்ணப்பஞ்செய்ய, குமாரர் அதற்கு, 'நாமுடைய இடத்திற் சிநேகத்தினாலே சொல்லுகிறீ'ரென்று மிகவும் கிருபையுடையராய் முக்கியாத்துவிதமாகப் பிரணவார்த்தத்தையும் சர்வஞ்ஞானோத்தர மென்கிற ஆகம இரகசியத்தையும் உபதேசித்து, 'இதைப் பக்குவான்மாக்களுக்குப் போதியும்' என்றனுக்கிரகித்தார். அவர் பிரணவ பஞ்சாக்கரங்களுடைய அர்த்தத்தையும் சர்வஞ்ஞானோத்தரத்தையும் பின்னையும் அத்துவிதமாகச் சொல்லுகிற ஆகமார்த்தங்களையும் நீலகண்ட சிவாசாரியருக்கு உபதேசிக்க,

அவர் சிவராசஞானியாகிற காசியிலே மணிகர்ணிகாதீரத்திலே பெரியமடத்தில் நயிட்டிகவரியரான விசுவேசுர சிவாசாரியருக்கு உபதேசிக்க, அவர் ஆரியப்பிராமண வங்கிசத்திலே அவதரித்துச் சைவசன்னியாசியான சதாசிவ சிவாசாரியருக்கு உபதேசிக்க, அவர் கன்னடதேசத்திற் சிவமார்க்கப் பிரகாச சிவாசாரியருக்கு உபதேசிக்க, அவர் சோழதேசத்தில் மருதாந்த சோழபுரத்திலே யவதரித்தருளின சிவாக்கிரயோகிகள் என்னும சிவக்கொழுந்து சிவாசாரியருக்கு உபதேசிக்க, அவர், தொண்டைமண்டலத்தில் அவதரித்தருளிச் சிவாகமங்களில் ஞானபாதத்திலே நாலுலட்சம கிரந்தம் அத்தியயனம பண்ணின அதிவாணசிரம ஆசாரியவரிய சைவபரிபாலக சிவாக்கிரயோகிக்கு அனுக்கிரகிக்க, அவர், சுவாந்த நாச்சியார் 'செனன மரணோபாதி நீங்கச் சிவானன்னிய சாக்ஷாத்காரம் விளங்க அனுக்கிரகிக்கவேண்டு' மென்று விண்ணபபஞ்செய்ய, மிகவுங் கிருபையாய்ச சிவாகமங்களிற் சாரமாயிருக்கிற வைதிகசைவசித்தாந்தாத்துவயப் பிரதிபாதகமாய்த் திராவிட ரூபமாய்ச் சிவநெறிப்பிரகாசமென்னும சாத்திரத்தை யுபதேசித்தார். இதன் பொருளை அளபபரிதாயினுஞ் சமுத்திரகலச நியாயமாக நான் அறிந்த அளவு உரையிடுகின்றேன். இதைப் பெரியோர்கள் நோக்கிப் பிழைதீர்த்தருளுவர்.

## கணபதி துதி

(அவதாரிகை.) மேல் இந்தச் சாததிரம நிர்விக்கின பரிசமாப்தியின் பொருட்டுஞ் சிஷ்யவசனதாரணபிவியத்தியின் பொருட்டும இந்தச சாத்திரம் உலகததிற் பிரகாசிககையின் பொருட்டும சிவாக்கிரயோகீந்திர சிவாசாரியர் ஆதியிலே பண்ணின விநாயகத் துதி.

1. சீராருஞ் செம்மேனித் திகழ்வு மானைத்
திருமுகமுங் கண்மூன்றுஞ் செய்ய தாளும்
ஏராரு மங்குசமும் நீள்பா சத்தோ
டிலட்டுகமு மெழுதுமெழிற் கொம்பு மென்றும்
நேராக வைத்ததிருக் கரங்க ளைன்கு
நின்மலமா மும்மதமு முள்ள நித்தன்
காராருங் கண்டனுமை களிக்க வந்த
கணபதியி னிருபதங்கள் கருதல் செய்வாம்.

(இதன் பொருள்.) சீர் ஆரும் செம்மேனித் திகழ்வும் - நித்திய விபூதியுடைய சிவந்த திருமேனி யொளியையும்; ஆனைத்திருமுகமும் - கயமுகாசுரனைச் சங்கரிக்க வேண்டி யானைமுகம்போன்ற முகத்தையும்; கண்

மூன்றும் - சோமசூரியாக்கினி ரூபமாகிய மூன்று நயனங்களையும்; செய்ய தாளும் - சிவந்த சீர்பாதங்களையும்; ஏர் ஆரும் அங்குசமும் - அழகு பொருந்திய தோட்டியும்; நீள் பாசத்தோடு - நீண்ட கயிறும்; இலட்டுகமும் - மோதகமும்; எழுதும் எழில் கொம்பும் - மகாமேருவில் மகாபாரத மெழுதுவது நிமித்தமாகப் பிரகாசியாநின்ற ஒரு கொம்பும்; என்றும் - எப்பொழுதும்; நேராக வைத்த திருக்கரங்கள் நான்கும் - மேற்பாகத்தில் வலப்புறத்தில் அங்குசமும் இடப்புறத்தில் பாசமும் கீழ்ப்பாகத்தில் இடப்புறத்தில் மோதகமும் வலப்புறத்தில் கொம்பும் இப்படி நேராக வைக்கப்பட்ட ஸ்ரீஹஸ்தங்கள் நான்கையும்; நின்மலம் ஆம் மும்மதமும் உள்ள - நின்மலமாகிய இச்சாஞானக்கிரியா ரூபமாகிய மூன்று மதத்தையு முடைய; நித்தன் - நித்தியனாய் அழிவற்றிருக்கின்றவன்; கார் ஆரும் கண்டன் உமை களிக்க வந்த - கறுத்த கண்டத்தையுடைய ஸ்ரீகண்டபரமேசுவரனும் உமாதேவியாரும் கூடிக் களிக்கத் திருவவதாரஞ்செய்த; கணபதியின் இரு பதங்கள் - கணங்களனைத்தினுக்குஞ் சுவாமியாகிய விக்கினேச்சுவரனுடைய இரண்டு திருவடிகளையும்; கருதல் செய்வாம் - தியானம்பண்ணுவாம். (க)

## சிவபெருமான் துதி

(அ-கை.) மேல் இச சாத்திரத்திற் சொல்லப்படாநின்ற சிவபெருமானைச் சுவரூப தடத்த இலக்கணத்தால் துதிக்கின்றது.

2. சத்தியஞா னனந்த மயமாய் நின்ற
 தற்பரனே சத்தனென வருவ னாகிப்
பத்தியின னினைந்தேத்த வருவ ருபப்
 பான்மையா யுத்தியுத்தப் பரிச தாகிப்
புத்தியா னதுவமுத்தி தானு நல்கப்
 பொருந்துபிர விருத்தகனு மியல்ப தாகி
நித்தியமாஞ் சத்தியுருத் தரித்து மன்று
 ணின்றுநடஞ் செய்வோன்ற னினைதல் செய்வாம்.

(இ-ள்.) சத்திய ஞான ஆனந்தமயமாய் நின்ற தற்பரனே - அசத்தியமல்லாமலும் அசித்தல்லாமலும் அனானந்தமல்லாமலும் இப்படி அநத்தியாவிருத்தியாலதொழிந்து இதுவென்று சொல்லப்படாத சச்சிதானந்தமான தற்பரனே, கர்த்தாவென்கின்ற அவத்தாதீதமான பரப்பிரம்மமே [இது சுவரூப இலக்கணம்; இதற்குப் பிரமாணம் அசிந்தியவிசுவசாதாக்கியத்திற் கண்டு கொள்க]; சத்தன் என அருவன் ஆகி - யாதோ ஒரு

காரணத்தால் பரையாதி பஞ்ச சத்திகளில் ஞானசத்தியே திருமேனியாக உத்தியோகமற்றிருக்கிற சத்தியையுடைய சத்தன என அரூபியாய்; பத்தியினால் நினைந்து ஏத்த அருவுருபப்பான்மையாய் உத்தியுத்தப் பரிசது ஆகி - யோகிகளாலும் ஞானிகளாலும் மந்திரங்களைச் செபிக்கிறவர்களாலும் பத்தியுடனே தியானித்துப் பூசிப்பது நிமித்தமாக அரூபமாயிருக்கின்ற பரையாதி பஞ்சசத்திகள்ரூபமான—கலைகளுடனே கூடியிராநின்ற சுத்தமாயையிற் பதிந்தபொழுது உண்டான—ஈசானாதி பஞ்சமந்திரங்களைத் திருமேனியாக உடையவராகையாலே அரூபரூபமாய்க்காரியமபண்ணஉத்தியோகித்திருக்கிற சத்தியை யுடையவ ரதனால் உத்தியுத்தரென்னும் அவத்தையையுடைய சதாசிவமூர்த்தியாய்; புத்தியானதுவும முத்திதானும் நல்கப் பொருந்து பிரவிருத்தகன் ஆம் இயல்பது ஆகி - பிரளயாகலருக்குப் போகமும் மோக்ஷமும் பொருந்தக் காரியங்களைப் பண்ணுநின்ற சக்திகளையுடையராகையால் பொருந்தப்பட்ட பிரவிருத்தரென்னும் அவத்தையை இயல்பாகவுடைய மகேச்சுவரராய்; நித்தியம் ஆம சத்தி உருத் தரித்து மன்றுள் நின்று நடம் செய்வோன் தாள் நினைதல் செய்வாம் - தனது சமவாய சத்தியே திருமேனியாகத் தரித்துக்கொண்டு சகல ஆன்மாக்களுக்கும் அனுக்கிரக காரணமாகக் கனகசபையிலே நிருத்தமபண்ணுநின்ற சிதம்பரேச்சுவரனுடைய பாதபதுமங்களைத் தியானம்பண்ணுவாம் [இது தடத்த இலக்கணம்; இதற்குப் பிரமாணம் வாதுளம் பவுஷ்கரம் மிருகேந்திரம் இவற்றிற் கண்டு கொள்க]. (உ)

## சத்தி துதி

(அ-கை.) மேல் இந்தச் சிவபெருமானுடைய அக்கினிக்கு உட்டணம் போலப் பிரிவற்றிருக்குஞ் சத்தியைந் துதிக்கின்றது.

3. பரையாதி யிச்சையறி வியற்ற லென்னும்
பான்மையாய்ப் பரநாத விந்து வாகித்
தரையாதி யாக்கியளித் தழித்தல் செய்யுஞ்
சத்தியாய் மனோன்மனியாய் மகேசை யாகி
வரையான்செய் தவப்பயனு முமையா ளாகி
மன்றினடம் புரிவோன்றன் வாமங் கொண்டாள்
விரையாரு மலர்ப்பாதஞ் சென்னி மீதும்
விழிமீதும் வைத்துளத்தில் விரும்பு வாமே.

(இ-ள்.) பரை ஆதி இச்சை அறிவு இயற்றல் என்னும் பான்மையாய் - பரமசிவனிடத்திலே அக்கினிக்கு உட்டணமபோலப் பிரிவற்றிருக்

கின்ற அருட்சத்தியானது பஞ்சகிருத்திய நிமித்தமாகத் தொழில் வேற்றுமைகளால் பரையாதி பஞ்ச சத்திகளாம்—பரமசிவனிடத்தில் ஆயிரத்து ஒரு கூறாக ஆன்மாக்களை அனுக்கிரகிக்கவேண்டுமென்று அருண்முகிழ்த்தது பராசத்தி. அந்தப் பராசத்தியில் ஆயிரத்து ஒரு கூறாக உண்டாய் ஆன்மாக்களுக்கு விடய சுகத்தைப் பண்ணும் ஆதிசத்தி. அந்த ஆதி சத்தியில் ஆயிரத்து ஒரு கூறாக உண்டாகி உபாதானத்திரயங்களிலேநின்று சிருட்டியாதிகளைப் பண்ணவேண்டுமென்னும் இச்சையை யுடையது இச்சா சத்தி. இச்சாசத்தியில் ஆயிரத்து ஒரு கூற்றில் உண்டாகிச் சருவ ஆன்மாக்களுடைய கன்மங்களையும், மலபரிபாகங்களையும், அவற்றுக்கீடாகச் சுத்தம் மிச்சிரம் அசுத்தம் என்னும் மூன்று அத்துவாவில் தனுகரண புவனபோகங்களை விந்து மோகினி மான் என்னும் உபாதானத்திரயங்களிலேநின்றும் உண்டாக்குமதையும் இஃதின்னபடி யென்று தன்னிலேதானே உள்ளபடி எல்லாவற்றையும் அறியும் ஞானசத்தி. அந்த ஞானசத்தியில் ஆயிரத்துள் ஒரு கூறாக வுண்டாய்க் கிருத்தியங்களைப் பண்ணும் கிரியா சத்தி—இப்படிப் பஞ்ச சத்திகளாம் இயல்பாய்; பரநாத விந்து ஆகி - சுத்தமாயா சொரூபமான அபரநாதம் அபரவிந்துகளுக்குத் தாரகமாம் பரநாதம் பரவிந்துவுமாய்; தரை ஆதி ஆக்கி அளித்து அழித்தல் செய்யும் சத்தியாய் - பிருதிவி முதலானவைகளை யுண்டாக்கிப் பாலனம் பண்ணிச் சங்கரிக்கும் ஜனனி, ரோதயித்திரி, ஆரணி என்னுஞ் சத்தித்திரயங்களுமாய்; மனோன்மனியாய் - பரையாதி பஞ்சசத்தியில் பத்தில் ஒன்றிலுண்டான சிவசாதாக்கிய முதலான பஞ்ச சாதாக்கிய ரூபமான சதாசிவ தேவர்க்கு மனோன்மனி யென்னும் போக சத்தியுமாய்; மகேசையாகி - கன்மசாதாக்கியத்தில் ஆயிரத்துள் ஒரு கூறாக வுண்டான சகளரான மகேசுரருக்குப் போகசத்தியான கவுரி என்னுஞ் சத்தியுமாய்; வரையான் செய் தவப்பயன் ஆம் உமையாள் ஆகி - மகேச்சுரமூர்த்திக்கு ஆயிரத்து ஒரு கூற்றிலுண்டான உருத்திர மூர்த்திக்குப் பருவதராசனான இமவான் தவம்பண்ண ஒரு காரணத்தால் அத் தவப்பலமாய் இமவானிடத்திலே திருவவதாரஞ் செய்தருளிய பார்வதியாரென்னும் போகசத்தியாய்; மன்றில் நடம்புரிவோன்றன் வாமம் கொண்டாள் - கனக சபையிலே பரமானந்தத் தாண்டவம் பண்ணும் பரமசிவனுடைய வாமபாகத்தைப் பெற்ற சிவகாமசவுந்தரியினுடைய; விரை ஆரும் மலர்ப் பாதம் சென்னி மீதும் விழி மீதும் வைத்து உளத்தில் விரும்புவாம் - வாசனை நிறைந்திருக்கின்ற தாமரைமலர்போன்றிராநின்ற சீபாதபதுமங்களைச் சிரத்திலும் கண்களிலும் இதயத்திலும் தரித்து வணங்குவாம். [இதற்குப் பிரமாணம் வாதுளாகமத்திற் கண்டு கொள்க].

(௩)

